யாத்திரிகரே! நீங்கள் செல்வது எங்கே?

மாஞ்செடி வழி நடுவே சிவந்த வைகறையில் சமுத்திர ஸ்நானஞ் செய்யப் போகிறேன்.

யாத்திரிகரே! அந்த சமுத்திரமெங்கே?

இந்நதியோட்டம் முடியுமங்கே வைகறை காலையாய் விரியும். அது நதிகள் மறையும் நிலயத்திலாகும்.

யாத்திரிகரே! உங்களுடன் வரும் வெகு பலர் எத்தனைபேர்?

அவர்களை எப்படி எண்ணுவதென எனக்கே தெரியாது. அவர்கள் நீரிலும் நிலத்திலும் நாளெல்லாம் கானஞ்செய்து இரவு முழுவதும் தங்கள் தங்கள் தீபங்களை ஏற்றிக்கொண்டு செல்லுகிறார்கள்.

யாத்திரிகரே! சமுத்திரம் எத்தனை தூரம்?

எத்தனை தூரம் என நாமெல்லாம் வினவுகிறோம். நாம் பேசுவதை நிறுத்தினால் நீர் அலைகளின் ஆரவாரம் ஆகாசத்தில் பொங்கும். எப்பொழுதும் அருகிலும் ஆனால் அப்பாலுமிருப்பதாகப் புலனாகும்.

யாத்திரிகரே: வெயில் வன்மையுடன் வளர்கிறான். ஆமாம் நமது வழி தூரமாகி துக்கமுள்ளதுமாகும். ஊக்கம் குன்றினால் கானம் செய்வோம். உள்ளம் இளைத்தாலும் அதுவே துணையாகும்.

யாத்திரிகரே: இரவு முந்தினாலோ?

புதியகாலை கீதமுடன் புலனாகும்வரை நாம் தூங்கக் கீழே சாய்வோம். நம்மை அழைக்கும் கடல் காற்றிலே மிதப்பான்.

சாகரத்திலே நதி விழுந்து மறைந்தால் என் சோகமுடனாக வேண்டும்? :—டாகூர்கவி

உபநிஷத நூல்கள் விற்குமிடம் :—

ஜம்புநாதன் புஸ்தகசாலை, 14 பள்ளியப்பன் தெரு,
சாவுகார்பேட்டை, சென்னை.

ओं नमो भगवते वैवस्वताय ।
मृत्यवे ब्रह्मविद्याचार्याय ॥

சத்தியம் சதாகாலம் தூக்குமரத்திலாகும், அசத்தியம் அழியாக் கிரீடம் தரிக்கும்; ஆனால் சந்ததிகளை தூக்குமரமே அரசு புரியும். காணுமலாகி சுவாமி சாயையாய் மறைந்து சகத்தைக் காவல் புரிவார். —லவல் கவி

# கடோபநிஷதம்

அல்லது

# யமன் பேசுகிறார்

மூலமும்—உரையும்

மகாத்மா காந்தி, மகான் அரவிந்தர் யமனைக்கட்டித்தழுவி, பரமனிடம் குஷ்தி செய்யவும் எனச் சொல்லுகிறார்கள்.

ஏன்?

அவர்கள் எழுதும் மரணபயம் காலன் ரகசியத்தைப் படித்தால் தெரியும்.

ஆசிரியர்

எம். ஆர். ஜம்புநாதன்.

The Kabeer Printing Works, Triplicane,

# கடோபநிஷதம்

அல்லது

# யமன் பேசுகிறார்

நாகரம், தமிழ் சுலோகமும், இனிய உரையும்

சென்னை சட்ட இலாகா ஜில்லா நீதிபதி
கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரி
அவர்களின் யம சந்தேசத்துடன்

எம். ஆர். ஜம்பு நாதன்
எழுதியது.

KATHO UPNISHAD

பன்னரு முபநிட நூலெங்கள் நூலே
பார்மிசை யேதொரு நூலிது போலே.

பாரதி.

1932

உரிமை பதிவு செய்தது

ஜம்பு நாதன் புஸ்தகசாலை,
14, பள்ளியப்பன் தெரு,
சென்னை.

விலை அணா எட்டு

### உபநிஷத சங்கநாதம்

---

செத்த பிறகு சிவலோகம் வைகுந்தம்
சேர்ந்திட லாமென் றெண்ணி யிருப்பார்
பித்த மனிதரவர் சொலுஞ் சாத்திரம்
பேயுரை யாமென்றிங் கூதேடா சங்கம்.

இத்தரை மீதினிலே யிந்த நாளினில்
இப்பொழு தேமுக்தி சேர்ந்திட நாடிச்
சுத்த அறிவு நிலையிற் களிப்பவர்
தூயவ ராமென்றிங் கூதேடா சங்கம்.

பொய்யுறு மாயைப் பொய்யெனக் கொண்டு
புலன்களை வெட்டி புறத்தி லெறிந்தே
ஐயுற வின்றிக் களித்திருப் பாரவர்
ஆரிய ராமென்றிங் கூதேடா சங்கம்.

—பாரதி

In the whole world there is no study so beneficial and elevating as that of Upanishads. It has been the solace of my life—it will be the solace of my death.

—SCHOPENHAUER.

## பொருளடக்கம்



---

# கடோபநிஷதம்

அல்லது

## யமன் பேசுகிறார்

## 1. முகவுரை

கடோபநிஷத கதையாவது :—வாசஸ்ரவர் என்னும் ஒரு வேஷதாரி. நசிகேதஸன் என அவனுக்கு ஒரு மகன். தந்தை யக்ஞமொன்று செய்யுங் காலத்தில் அப்பா வேஷதானஞ் செய்ய வேண்டா மென மகன் கண்டித்தான். தந்தை கோபமுடனாகி மகனை யமனுக்கு அளித்துவிட்டான். மகன் யம பவனம் சென்று காத்திருந்து அமுதவாழ்க்கை அடையும் சூட்சமங்களை அறிந்து பல வெகுமதிகளுடன் வீடு திரும்பி சாந்தமான தந்தையுடன் மறுபடியும் சுக வாழ்க்கையி லானான்.

## 2. அஞ்சாமையே முதன்மையாகும்

இக் கதை எல்லாக் குணங்களிலும் அஞ்சாமையே முதன்மையாகும் என அறிவிக்கும். அதுவே யாவற்றிற்கும் அடிப்படையாகும். அஞ்சாமை என்னும் ஆயுதத்தை ஒருவன் கைக்கொள்ளாவிடின் உண்மையைத் தரிசிப்பது அரிதாகும். அன்பையும் வளர்க்க முடியாது. ஹரி என்னும் உண்மையை நாடுபவர்கள் வழியானது அஞ்சாதவர்களுக்கே யன்றி கோழைகளுக் கில்லை. அஞ்சாமை என்னும் சிறந்த ஆயுதத்தையே தீரர்கள் கொள்வார்கள். அஞ்சாமை என்பது புறப் பயங்களாகிற வியாதிகள், தேகத்திற்கு நேரும் இடையூறுகள், இறப்பு, பொரு ளிழத்தல், அன்பிற்குரிய மக்களையும் பந்துக்களையு மிழத்தல், புகழ் அழிதல் இத்தகைய



துன்பங்கள் நேரிடும் சமயங்களில் பயப்படா திருத்தலைக் குறிக்கும். புற அச்சங்களை யொழிக்க உட்பகைவர்களை வெல்ல வேண்டும். தேகத்திலேயுள்ள ஆசை யொழிந்தால் அச்சம் தாமாகவே தொலையும். அச்சமழிவது என்பது. மனப்பான்மையின் மாறுதலாகும். இப்படி மனப்பான்மை மாறியவன் கடவுளை, நேருக்கு நேராக தரிசிக்கலாம்—(காந்திஜீ). இவ் வஞ்சாமையினாலேயே இக்கதையி லுள்ள நசிகேதசன் பகவான் உண்மையை அறிந்தான். இவ்வமுதமான அஞ்சா நெஞ்சை நினைக்குங்கால் அடியிற் கண்ட பெரியார்களை ஞாபகத்திலாகும். சாவித்திரி மிருத்யுவை தரிசித்து சத்தியவானைப் பெற்றாள். தர்மபுத்திரன் தாக மென்னும் யமனை எதிர்த்து கொக்கான மிருத்யுவினிடம் வெகுமதி பெற்றான். கிருஷ்ணனால் அஞ்சா நெஞ்சு அமுதத்தை அர்ச்சுனன் அறிந்து பூச் சக்கரவர்த்தி யானான். அச்சமற்ற குணத்தினாலேயே ஆதியில் ஒரு துறவி நீ பூலோகம் ஜயித்தவனானால் எனக்கென்ன? உன் உடைகளை எறிந்து எனக்குச் சீடனானால் கற்பிப்பேன். இல்லையேல் நீ என்னை அணுகாதே போ என்றார். சிக்கந்தர் ‘உன்னைக் கொல்வேன்’ என உறுமினான். ஒரு தலை சென்றால் வேறு தலை முளைக்கும் எனத் துறவி கூறவே அலெக்ஸாந்தர் இந்தியாவை விட்டு ஓடினார். ராம்ஸே மாக்டொனால்டிடம் என் உயிர் உனக் கர்ப்பணம் எனக் கூறி கம்பீரமாய் கர்ச்சனை செய்து காந்திஜீ தனது அஞ்சாமையைப் புலனாக்கி சர்ச்சில்லையும் கலக்கினார்.

## 3. எதிர்ப்பின் உண்மை

இவ் வஞ்சாமைக்குட்பால் தந்தை யானாலும், சத்தியத்திற்காக அவர்களை நசிகேதஸன் போல் எதிர்க்கவேண்டு

மென்பதை அறிவிக்கும். ஏனெனில் சீரழிந்த சமூகத் திட்டம், மதாவேசம் முதலியவைகளை எதிர்க்கும் இளைஞர்கள் வசமே எதிர்கால மாகும். விபத்தான நிலையிலிருக்குங்கால் பராமுகமா யிருப்பது கொடுங் குற்றத்திற் குள்ளதாகும். பராமுகமா யிருக்கும் ஜனங்களின் நடுவில் அநியாயம் வளரும். அநீதி முதலாளி, அநியாயச் சட்டம், அகம்பாவத் தலைவன், பொய் ஆச்சாரியர்கள் அதிகமாய்ப் பெருகுவது, எதிர்ப்பு சூன்யத்தினு லாகும். ஒழுக்கக் குறைவு எனவோ, சகிப்புத் தன்மையின் சூன்யமென இதை எண்ணவேண்டாம். ஆழ்ந்த கண்ணியம் என்னும் மொழியோடு இணைந்ததே எதிர்ப்பாகும். (Sir. S. Radhakrishnan, University Convocation Address, Lucknow, 1931). உயிர் போனாலும் தீமையான, காரியங்களை எதிர்த்துப் போராடவேண்டு மென்ற உறுதி வேண்டும். இல்லாவிடில் ஒருநாளும் இறைவனைக் காண முடியாது. என் அனுபவத்தி லிருந்தே மேற்கூறிய உறுதிக்கு வந்திருக்கிறேன். (காந்திஜி)

## 4. அறிவு-வன்மை

இவ் வெதிர்ப்பு குணங்களுடன் கடவுளைக் காண ஒருவனிடம் அறிவும் க்ஷத்திரமும் (போர்க்குணம், பெரும் பலம்) வேண்டுமென இந்த உபநிஷதக் கதை கூறும். க்ஷத்திர மின்மையில் அறிவு பாழாகும். அறி வின்மையில் க்ஷத்திரம் வீணாகும். போர் குண மில்லையானால் பெண்களாலும் மதிக்கப்படுவதில்லை. அறிவில்லையானல் குழந்தையும் சிரிக்கும். க்ஷத்திர மின்மையில் பௌத்தர்கள் மறைந்தார்கள். பிரும்ம மின்மையில் மொகலாய மன்னர்கள் சென்றார்கள். இவ் வுண்மையை யறிந்தவர்களே இவ்வுல



கத்தைப் பற்ற முடியும். இவ் வுலகமே இல்லையானல் அவ் வுலக மேது? (ப. கீ. 4-31) இதை எண்ணித்தான் கடவுளைக் காண இக் குணங்கள் வேண்டுமென இவ் வுபநிஷத முரைக்கும்.

**यस्य ब्रह्म च क्षत्रं च उभे भवत ओदनः ।**

இம் மொழியைப் படித்தவுடன் சதபத பிராம்மணம் (10-4-1) நமது ஞாபகத்தி லாகும். அக்கினியும் இந்திரனும் பிராமணனும் க்ஷத்திரியனுகச் சிருட்டியாயிற்று. நாம் தனிமையா யிருப்பதால் ஒன்றையும் புலனுக்க முடியவில்லை. இனி ஐக்கியமாவோமென இணைந்து ஒன்றானார்கள். இதை எண்ணித் தானே விவாகம் முதலிய ஸம்ஸ்காரங்களில் பிரம க்ஷத்திரமான என்னைக் காப்பாற்றவேண்டுமென அடியிற் கண்ட மொழிகளைப் பல முறைகள் கூறுவது. **स न इदं ब्रह्म क्षत्रं पातु.**

உபநிஷத காலத்தில் யாக்ஞவல்கியருடன் சிலர் க்ஷத்திரியர்களை நாம் தோற்கடிப்போம் என்றார்கள். அதற்கு யாக்ஞவல்கியர் நாம் பிராமணர்கள். அவர்கள் இராஜன்யர்கள். அவர்களை நாம் தோற்கடித்தால் யார் தோற்றமாதிரி யாகும்? என மொழிந்ததிலிருந்து க்ஷத்திரத்தை அழிப்பது பிரம்மத்தை அழிப்பது போலாகும். பிரம்மமும் க்ஷத்திரியமும் ஒன்றாய் இணையவேண்டு மென்பதாகும். நீ பிராமணனென்று சொல்லாதே. சொன்னால் உன்னிடமுள்ள க்ஷத்திரிய குணம் மறைந்துவிடும். க்ஷத்திரியனென்றால் பிரமம் என்னும் அறிவு மறைந்துவிடும் என வேறு ஒரு உபநிஷத்தில் சொல்வதானது இரண்டும் முதன்மையாக இணைந்து செல்லவேண்டுமென்பதைப் புலனாக்கும். உபநிஷத காலத்தில் ஜனகர் முதலிய அரசர்கள் எல்லாம் பிரம்ம க்ஷத்திரியர்களாகவே இருந்தார்கள். பிரம்ம ஞானத்தில் புலவர்களா யிருந்ததோடு புவியை அரசுபுரியும் க்ஷத்திரிய குணங்களும் அவர்க

விடமிருந்தன. மகாபாரத காலத்துப் பிராமணரான துரோணாசாரியரும் பிரம க்ஷத்திரியராகவே இருந்தார். ஸ்ரீ இராமர் கானகம் சென்ற பொழுது, அவர் மொழியில் சத்தியமும் கையில் அம்பு மிருந்ததாக வால்மீகி கூறுகிறார். பிற்காலத்தில் வெள்ளை நாட்டு மாக்கியவலி என்பவன் இங்ஙனமே நினைத்தான். Armed Prophets have conquered and the unarmed ones have been destroyed. ஆயுதமணிந்த அறிஞரே ஜயம் பெற்றார்கள். ஆயுதமற்ற அறிஞர்கள் அழிந்தார்கள். உலகத்தில் இதுவரை பிறந்த தீர்க்கதரிசிகளும் அறிஞர்களும் ஆயுதமன்னியில் வாழ்ந்திருந்தால் அவர்கள் இருந்தவிடம் தெரியாமல் மறைந்திருப்பார்கள். இதனால் ஒருவனிடம் அறிவும் போர்க்குணமு மிருக்கவேண்டுமெனப் புலனாகும். ஒன்றை அதிகமாகவும் மற்றொன்றை தாழ்வாகவும் நினைத்தலாகாது. இப்பிரச்னையில் நவீன மொழியான அறிவே அவசியம் என்பதற்கு மதிப்பளிப்பதைக் காட்டிலும் புராதன சத்திய அறிஞர்களின் உண்மை மொழிகளையே பற்றவேண்டும். போர்க்குணமே பெரிதென சொல்லவில்லை. ஆனால் அதை அறிவிற்கு குறைவான நிலையில் வைக்கலாகாது. (வான்-லோரி ஹோரவன்)

## 5. அனல் எது?

இக்குணங்களுடன் அனலான அற்புத சூட்சமங்கள், ஆண்டவனை அணுக அவசியமெனக்கூறும், புவியின் பழைய இருக்வேதத்தின் முதல்மொழி அக்னியாகும். அந்த அனல் எது? புராதன புருஷர்கள் வாழையடி வாழையாய் வரும் கல்வியையும் ஒழுக்கத்தையும் அனல் என்றார்கள். அனலை தானஞ் செய்வது விபத்தாகும். பெருங் கிளர்ச்சியையும் பெரும் தீச்சுடரையும் அது மூட்டிப் புல



னாக்கி யுள்ளது. அது புரட்சியின் உணர்வைப் புலனாக்கி கட்டை, கோல், வைக்கோல் முதலியவைகளை எரித்து புனிதமாக்கி, நம்மிடம் வந்துள்ளது. இவ்வனல் பாவுவதாலுண்டாகும் பூமி யதிர்ச்சி, சமூக பொருளாதார, இராஜீய பூகம்பங்களுக்குப் பயப்படுபவன் கலாசாலையை அணுகலாகாது. பெரும் தேசங்கள் எல்லாம் காலங்களுக் கேற்றவாறு மாறாமல் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டன. இனி இவர்கள் பயனில்லை என காலன் இவர்களை அழித்துவிட்டு முன் சென்றான். நாம் இனி பாதுகாப்படைய வேண்டுமானல் இவைகளை எதிர்க்கும் உணர்வான ஸ்பிரிட் என்னும் புனிதமாக்கும் அனலைப் பயன் செய்வ தவசியமாகும். (ஸர். ராதா கிருஷ்ணன், லக்நோ கலாசாலை, சந்தேசம், 1931)

ஸ்ரீ சங்கரர் அடியிற் கண்டவாறு, அனல், அதன் நிலை செயல்களைக் கூறுகிறார். (1) விஞ்ஞானம், அத்தியயனம் அனுபவமாவது (2) தாய் தந்தை குருநாதன் முதலியவர்களின் சேர்க்கையால் சிறப்பாகும் குணம் (3) யக்ஞம், அத்யயனம், தானமாகும். இச்சந்தர்ப்பத்தில் கர்ப்போப நிஷதத்தில் அடியிற்கண்ட மொழிகளும் நினைவிலாக்குவது நன்மையாகும். மனித தேகத்தில் மூன்று அனல்கள் உண்டு. (1) தர்சனக்னி, ஞானக்னி, கோஷ்டாக்னி (2) தர்சனக்னி புலனாக்கும். (௨) ஞானக்னி உண்மையை அறிவிக்கும். (3) கோஷ்டாக்னி சீரணமாக்கும் அனலாகும். முகத்தில் ஆஹவனியம் எனவும், வயிற்றிலே கார்ஹபத்தியம் எனவும், நெஞ்சிலே தட்சிணாக்கி எனவும் அவ்வனலுக்குப் பெயராகும். இவ்வனல்களையே மர்மமாய் ஒரு வேளை யமன் அறிவித்திருக்கலாம். எது எங்ஙன மிருந்தபோதிலும், இவ்வனலின் சூட்சமத்தை கவனித்தால் திடகாத்திரனாகி, ஞானமுடன் அஞ்சாநெஞ்சுட னிருப்பதே இவ்வனலின் நிஜமான சுடர்

எனத் தோன்றும். இக் குணங்களை நசிகேதசனிடம் கண்டு யமபகவான் இதை நசிகேதஸ அனல் என அழைத்ததே இதன் உண்மைகளை நிரூபிக்கும். லோகாதிமக்னி என்னும் ஒரு அக்னியையும் இந்நூல் அறிவிக்கும். உலகத்தின் அடிப்படையான எல்லாப் பிரிவுகளை இணைக்கும் சூட்சமத்திற்கே லோகாதிமக்னி எனப் பெயர். லோகாதி அக்னியின் பிரிவுகளை வேதத்தில் செங்கல் என்பார்கள். இவ் வுபநிஷத்திலும் இப்பிரிவான உபகரணங்களை செங்கல் எனச் சிலர் சொல்வதுண்டு. (1—15) உலகங்கள் செங்கற்களாகும். (சதபத பி. 5) ஒரு செங்கலான அவன் பல செங்கற்களானான். (சதபத பி. 10) சுவர்க்கமெனை ஆகாயக் கோட்டை கட்டுவதற்கு முன் புவிகளின் பிரிவு சூட்சமங்களை யெல்லா மறிந்து பெருமையுடனாக வேண்டுமென இவ்வக்னி புலனாக்கும். வைசுவானலன் என ஒரு அனலுண்டு. நசிகேதஸன் யமபவனம் சென்றதும் வைசுவாநரனானன். வைசுவாநரன் என்றால் நிலையாய் பிடிவாதமாவதற்குப் பெயர். (சதபத பி. 4. 2. 4. 23) இன்னமோரு உரையுமுண்டு. வாசசிரவன் குற்றமற்ற நசிகேதஸனை மிருத்யுவிற்கு அளித்தவுடன் மனித விசுவமான இளைஞர்கள் ஒன்றுதிரண்டு அவர்களின் எல்லா உணர்வையும் உற்சாகத்தையும் அவனுக்கு அளித்திருக்கலாம். அதனால் புவியிலுள்ள அனலையெல்லாம் பெற்று யமபவனம் சென்றவுடன் மிருத்யுவினாலும் பொறுக்க முடியாத உற்சாகம் உணர்வு திரண்ட வைசுவாநர அனலானன். (யமனும் அவ்வனலைக் கண்டு கலங்கி சாந்தமளிக்க முயன்றான்.) நவீனமாய் இதை உரைத்தால் பெரிய நோக்கத்திற்கு உயிரைப் பலியளிக்குங்கால் மகா ஜனங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து ஆசி கூறுவார்கள். அதனாலுண்டாகும் திட்டமான எண்ணமும் திருடமான உற்சாகமே வைசு



வாநரனாகும். நசிகேதஸனே ! இவ்வனல்களின் நிலயம், உன் நெஞ்சு என யமன் கூறியது இதை நம்மகத்திலேயே பயிற்சி செய்யலா மென்பதாகும்.

## 6. ஈசன் உண்மை.

இக்குணங்களால் கடவுளை அனுபவிக்க முடியுமெனக் கூறி அவனைப் பற்றி அடியிற் கண்டவாறு கூறும். கண்களுக்குத் தென்படாத ஓர் சக்தி. அவனை குறிப்பிப்பது முடியாத காரியம். புலன்களுக் கெட்டாத ஓர் விஷயம். உலகிலுள்ள இயற்கை ஆக்ஞையும் இறைவனும் ஒன்றேயாகும். அவர் ஆக்ஞை என்னும் சட்டத்தை மறுக்க முடியாது. அக் கட்டளைகளை அடக்கமாகவும் பணிவுடனும் அமைதியாகவும் ஏற்றுக் கொண்டால் நமது வாழ்க்கையைக் கஷ்டமின்றி நடத்த முடியும். எவருடைய குணமாவது மாறுதல் அடைந்து நமது அந்தக்கரணத்தில் உண்மையில் கடவுளிருப்பதாக அறிகிறரோ அதுதான் சிறந்த தாகும். (மகாத்மாஜீ)

## 7. சயன்ஸும் தர்மமும்

உண்மையை அறிய சாஸ்திரத்தையும் (Science) தர்மத்தையும் தனிமையாய்ப் பிரிக்காதே எனக் கூறும். ஆதியில் மதாவேசம் பிடித்து பெரிய யுத்தம் ஐரோப்பாவில் மகம்மதியர்களும், கிறிஸ்தவர்களும், பிராடஸ்டண்டுகளும், கேதலிக்கர்களும் புரிந்து ஆயிரக்கணக்காய் கொலை புரிந்துகொண்டது இவ்வுண்மையை யறியாததனலாகும். ஆனல் கடோபநிஷதம் சயன்ஸ் என்னும் சாஸ்திரத்தோடு இணைந்ததே சர்வேசனின் சொருப மாகும் எனக்

கூறும். சயன்ஸ் என்றால் ஐம்புலன்களின் அறிவு. அதனால் உண்டாகும் நினைவு, புத்தி, ஆராய்ச்சி, அனுபவம் முதலியவைகளாகும். கடவுள் என்றால் ஆன்மாவிற்கும் ஆண்டவனுக்குமுள்ள சம்பந்தம் என நவீன மதம் மொழியும். இவைகளை இணைத்துச் செல்லவேண்டுமெனவே கடோபநிஷதம் கூறும். இவைகளை இதுவரைப் பிரித்து, அதனால் திண்டாடி, இப்பொழுது இந்த ஞானத்தை அறிந்து 4,000 சாஸ்திரிகளுக்கு (Scientists) இதன் உண்மையை அறிவித்து நமக்குப் பழைய மொழிகளே புதிய சந்தேசமாகும் என்பதைப் புலனாக்கும், ஜனரல் ஸ்மட்ஸின் மொழிகளை எண்ணுவது நன்மை. சாஸ்திரம் தர்மத்தோடு இணைந்ததாகும். அவைகளால் நாம் வெகு லாபத்தை அடைந்துள்ளோம். இவைகளை ஒன்று சேர்க்கவில்லையானால் பெரும் விபத்திற்குள்ளாவோம். இவ் விபத்தை ஆதியில் அவர்களறிந்து மனம் என்னும் மடப்பயல் எனவும், சும்மா யிரு சித்தம் எனவும் நம்பிக்கையே நெறியாகும் எனச் சொல்லாமல் ரதத்திலுள்ள தலைவனைப்போல் முரட்டுக் குதிரையான புலன்களை உன் மனம் புத்தியால் வசமாக்கி ஆன்மா அதன் அகண்ட நிலையில் அமையவும் என்னும் சாஸ்திரமும் தர்மமும் இணையும் உண்மையைக் கூறினார்கள்.

மிருத்யுவை ஜயிக்கவும், வேதம், ஆயுர்வேதம், தனுர் வேதம், அர்த்த சாஸ்திரம் முதலியவைகளான பிருமயக்ஞத்தை அறியவும், புவி, புவியில் புலனாகும் எல்லாப் பெருமையுள்ள பொருள்களான தேவதைகளிலே தோயும் தேவ பீட்யத்தைத் தெரிந்துகொள்ளவும், திருடமான சங்கற்பத்தின் சூட்சமத்தை அறிந்து திவ்யமான தாணியில் யம தரிசனம் செய்த பிறகு நசிகேதசனைப் போல் இன்பமுடன் வாழவும் என்பதையே முக்கியமாய் இந் நூல் அறிவிக்கும்.



## 8. சுவர்கம் எங்கே ?

கடோபநிஷத்திலே சுவர்கத்தைப் பற்றிச் சொல்வதைவிட சுவர்க வழியையே சொல்லியுள்ளது. ஏனெனில் ஆதியில் சுவர்க வழியை சுவர்கத்தை விட சிறந்தது என எண்ணினார்கள். தேவர்கள் அமுதத்தைக் கண்டே திருப்தியாவார்கள். நவீன மொழியில் எ. என் ஒயிட் ஹெட் என்பவர் தனது (Science and Modern World) என்னும் நூலில் கூறுவதாவது :—

சத்தியத்தை கடவுள் தனது வலது கையில் மறைத்துக்கொண்டு, இடது கையில் சத்தியத்திற்காக எப்பொழுதும் பிழைகளோடு திருந்தித் திருந்தி உழைக்கும் முயற்சியை வைத்துக்கொண்டு உனக்கு எது வேண்டுமென வினவினால் நான் இடது கையை விரும்பி பரிபூர்ண சத்தியம் உங்களுடையதே என மறுத்து விடுவேன்.

## 9. சில சந்தேகங்கள்

கடோபநிஷதத்தை படிக்குங்கால் சில சந்தேகங்கள் தோன்றும். அச் சந்தேகங்களையும் அதற்கு விடையான சமாதானங்களையும் சற்று நோக்குவோம். மரணத்திற்குப் பின் தோன்றும் நிலையை யறிவிக்க வேண்டுமென நசிகேதசன் யமனை வினவினான். இதற்கு பதில் அளிக்கவில்லை. ஏனெனில் ஆன்மாவிற்கு ஜன்ம மரணமில்லை யாதலால் மரணத்திற்குப் பின் நிலை எது என குறிப்பாகக் கூறுவது அவசியமில்லை என விட்டுவிட்டார். மறுபடியும் ஆன்மாவையும் பரமான்மாவையும் பற்றிச் சொல்லுங்கால் இரண்டையும் தன்னந் தனிமையாய்ப் பிரித்து விளக்கவில்லை. ஏனென்றால் ஆன்மாவை பரமான்மாவினின்று பிரித்து நினைப்பது கடினமெனவே யமன் பிரித்துக் கூறவில்லை. மூன்றாவது வல்லி

முடிவில் கடோபநிஷதத்தைப் படிப்பதா லுண்டாகும் பய னைக் கூறுவதால் இக் கடோபநிஷதம் ஆதியிலே இத்துடன் முடிந்திருக்க வேண்டும். பிறகு பல வல்லிகளைச் சேர்த் திருக்கலாம்.

தர்க்கத்தாலும் தெள்ளிய அறிவினாலும் அவனை அறிய முடியாது. (2-13) பயிற்சியுள்ள புலன்க ளுள்ளவன் விஞ் ஞானத்தாலும் (3-11) மனத்தினாலும் (4-11) அவனை அறிய லாம். ஏன் இப்படி பரஸ்பரம் விரோதமாய்க் கூறவேண்டும். முதல் சுலோகத்தின் கருத்து அநுபவத்தினாலே உணர வேண்டு மென்பதாகும். அறிவு, ஞானம், மனம் முதலிய வைகள் செம்மையானவொழிய அநுபவ உணர்வறிவை அறியலா மென்பதாகும். இம்மொழிகளில் பரஸ்பர விரோத மொன்று மில்லை. ஆத்மா அவர் விரும்புபவர்க்கே மலர்வார் ; அருள் புரிவார். அவர்களுக்கே தன் வடிவத்தைக் காட்சி யாக்குவார். இச் சுலோகத்தின் கருத்தென்ன? ஜகத் பிர சித்தி பெற்ற ஸர். சி. வி. ராமனுக்கு சோதியானவன், தன் சொரூபத்தை அவருடைய 20 வருஷ விடாமுயற்சி, தோல்வி, தியாகத்தைக் கண்டு எப்படி உதயமாக்கி அருள் புரிந்தானோ அப்படியே சோதியிலும் அதற்குப் புறமாகவுள்ள கடவுள் ஒவ்வொருவரும் நாடும் நிலை முயற்சிகளுக் கேற்றவாறு அவ் வம்சங்களான தனது உண்மையைப் புலனாக்குவார் என்பதே யாகும்.

## 10. பகவத் கீதை

அடியிற் கண்ட கீதையின் மொழிகள் கடோபநிஷத்தில் ஏன் ?

(१) यदिच्छन्ती ब्रह्मचर्यं चरन्ती तत्ते पदं संग्रहेण

(கீதை. 8-11. க. 2-15)



(२) न जायतेम्रियते वा विपाश्चिन्नायं कुताश्चिन्न बभूव काश्चित्
अजो नित्यः शाश्वतोयं पुराणो न हन्यते हन्यमाने शरीरे

(கீதை. 2-20. க. 2-18)

(३) मन्यते हतं ।
उभौ तौ न विजानीतौ नायं हन्ति न हन्यते ।

(கீதை. 2-19. க. 2-19)

(४) इंद्रियेभ्यः पराण्याहुः इंद्रियेभ्यः परं मनः ।
मनसस्तु परा बुद्धिः परतस्तु सः

(கீதை. 3-42. க. 3-10)

கீதையை எழுதியவர்கள் இக் கடோபநிஷத மொழி களை அப்படியே கீதையில் எழுதி விட்டார்கள்.

## 11. கடோபநிஷத காலம்

கடோபநிஷத காலம் நவீனமாய்த் தோன்றிய எல்லா மதங்களுக்கும் முன்னரான சமய மாகும். அக் காலம் சுமார் 10,000 வருடங்களுக்கு முன்ன ரென்பதில் சந்தேகமே இல்லை. உலகத்திலுள்ள ஜனங்கள் எல்லாம் நிர்வாணமாய்த் திரிந்து நரபலி செய்து வாழுங்கால் கடோபநிஷத வாழ்க்கை எங்ஙன மிருந்தது என்பதை நோக்குவது அவசியமாகும்.

அக் கால ரிஷிகள் குடும்ப வாழ்க்கையின் மேன்மையை யறிந்திருந்தார்கள். தந்தை எனவும் குமாரன் எனவும் அறிந்துகொண்டதே ஸ்திரீ நிச்சயமாய் ஒருவனை மணஞ் செய்துகொண்டு வாழ்க்கை நடத்தினர்கள் என்பது நிரூபமா கும். வாழ்க்கையையும் சாந்தமாய் நடத்தினர்கள் என்பதில் சந்தேக மில்லை. இல்லையேல் சாந்தமாய் வாசஸ்ரவர் எப்படி

யக்ஞஞ் செய்து தான தர்மங்கள் செய்ய முடியும்? மாலைகளையும் பொன் ஆபரணங்களையு மணிந்து சங்கீதமும் சுக வாழ்க்கையு மனுபவித்தார்கள். அவரவர்களுக்குச் சொந்தமான நிலங்களு முண்டு. ஒவ்வொரு நிலத்திற்கும் சொந்தக்கார னில்லையானால் நீ இந்த நிலத்தைப் பெற்றுக்கொள்ளவும் என யமன் ஏன் மொழிய வேண்டும்? குதிரை சவாரியும், முரட்டுக் குதிரையும், பழகிய அசுவமும், தேர்ப்பாகனும் கடிவாளங்களும் அவைகளின் நுட்பமான செயல்களும் சகஜமான உபமானமாக யமன் மொழிகளில் காண்பதால் அவர்களின் திடமான தினசரி வாழ்க்கைப் புலனாகின்றது. க்ஷௌரக்கத்தியின் கூர்மையை அறிந்தவர்களாகையால் இகவாழ்க்கையில் நமக்கு எந்த வழியிலும் பின்வாங்கியவர்கள் இல்லை. வேற்றுமை வேண்டாம், சமத்துவமே, சிறந்த சித்தாந்த மென அவர்கள் சொல்லுவது புராதன சமய தர்மத்தைப் புலனாக்கும். பொருள்களின் சூட்சமத்தை அறிந்து, கண் ஒளிக்கும் கதிரவன் கிரணங்களுக்கு முள்ள கலப்பைக் கண்டிருந்தார்கள். எங்கும் ஈசனை எண்ணியபடியால் சாதி பேதமில்லை; கல் கட்டை பூஜையு மில்லை. ஈசனை உபாசனை செய்ய கோவில் குளம் செல்லவும், தேர் திருநாள் கொண்டாடவும் என யமன் சொல்ல வில்லையாதலாலும் மூர்த்தி பூஜையு மில்லை. தனக்கு மாறானால் மகனை யமபுரிக் கனுப்பும் கொடுமையான தந்தை யிருந்தான். தந்தையை அகிம்சையுடன் எதிர்த்த வீர நசிகேதசனு மிருந்தான். மனிதர்கள் வயது நூறு. புவியைக் கனவு என எண்ணாமல் சாதாரணமாய் யாவரும் உலக வாழ்க்கையை விரும்பி இருந்தார்கள். சாவது மில்லை இறப்பது மில்லை என அறிந்தவர்கள் சிராத்தம் எனப்படும் பிரேத சம்ஸ்காரம் செய்யவில்லை என அறிகிறோம். இனி கடோபநிஷதக் கதையின் தத்துவத்தை நோக்குவோம்.



## 12. கதைத் தத்துவம்

1. வாசஸ்ரவர் என்பது அருணோதய வானம். அவர் சிறு மேகங்களான பசுக்களை யமன் என்னும் காற்றிற்களித்தார். மேகக்கூட்ட மதிகரித்தவுடன் சிறிய காற்றுடன் இணைந்து மின்னலான நசிகேதச அனல் வானமான வாசஸ்ரவரின் மகன் போலாகிறான். அவன் பெருங்காற்றான யமனுக் கிரையாகி அமுதபாஷ்ப மாகிறான். வானத்தில் நடைபெறும் இந்நித்திய செயல்களை ஒரு கதையாக எழுதி உண்மைகளைப் புலனாக்கினார்கள்.

2. சந்திரனுடன் இணைந்த சூரியோதய காலமும் இக் கதையைச் சிருட்டிக்க உதவி யளித்திருக்கலாம். வாசஸ்ரவருக்கு கௌதமன் என ஒரு பெயருண்டு. கௌதமன் என்றால் சந்திரனுக்குப் பெயர். நட்சத்திரங்கள் வைதீக பாஷையில் பசுக் கூட்டங்களாகும். யமனான சூரியனுக்கு மங்கலான நட்சத்திரங்களை ஏன் அளிப்பது எனக் கண்டித்தவுடன் கனல் கிரணமான தன் மகன் நிலாவை சூரியனான யமனுக்கு தத்தமளிக்கிறான். அவன் அங்கு அனல் வன்மையை அறிந்து சோதியில் செம்மையாகிறான். இவ்வற்புத எண்ணமும் கதைக்குக் காரணமாகலாம்.

3. வாசஸ்ரவன் என்னும் யக்ஞப் பிராமணன் ஒருவனிருந்தான். அவன் கிழட்டுப் பசுக்களை தானமளித்தான். நசிகேதசனான மகன் அவனைக் கண்டிக்கவே அக்காலத்தில் கொடுமை மிருந்த யமன் என்னும் குருநாதரிடம் மகனை அனுப்பிவிட்டான். பிறகு அவன் அங்கு கற்றுத் திரும்பி அடக்கமாகி தந்தையைக் கீழ்ப்படிந்தான். இதுவே சத்தியமான கதை என சிலர் சொல்வதுண்டு.

4. புராணிகர் கதையைப் பார்ப்போம். வாசஸ்ரவன்
மகனை நரகத்தின் அதிபதியாய் பரக்களில் பிரிய மதிகமான
யமராஜனுக்கு பலியளித்தான். யமதேவர் ஒரு கோரமான
கொடுமை சுபாவமுள்ளவராம். ஆனால் யமராஜர் நசிகேதச
னிடம் கருணையாகி வேண்டிய வரங்களை அளித்து அவனை மறு
படியும் பூலோக மனுப்பிவிட்டாராம். அவனறிந்த உண்மை
களே இக் கடோபநிஷதமாகும். இனி தத்துவஞானர்கள் சொல்
வதையும் கவனிப்போம்.

5. வாசஸ்ரவர் தேகமயமான புருடன். மனமன்னி
யில் புலன்களால் பரமனுக்கு பூசை செய்வதுபோல் செய்
தான். மனதான அவன் மகன் அவனைக் கண்டிக்கவே, குமா
ரனை யமன் என்னும் ஆன்மாவினிடம் இணைத்தான். அவன்
இணைந்து தியானமாகி உண்மையை அறிந்து பிறகு வாசஸ்ர
வனையும் சாந்தமாக்கினானாம். அவர்களை ஆரோபணம் செய்
யப்பட்ட உண்மையை அறிவிக்கும் கதை எனக் கூறுபவர்
களுமுண்டு.

6. இக் கதைகளைப்பற்றி நாம் ஒன்றுஞ் சொல்ல
விரும்ப வில்லையாயினும் நித்தியமாய் மனித சமூகத்தில் அடி
யிற் கண்டவாறு நடைபெறும் சரிதையே இக் கடோபநிஷத
மாகும்.

வாசஸ்ரவன் மிருகவன்மை வடிவம். நசிகேதசன் சத்தி
யத்தில் சாய்பவனின் சொரூபம். யமன் சத்திய வடிவம்.
முதல் இருவர் போராட்டத்தை யமன் எங்ஙனம் தினந்
தோறும் புனிதஞ் செய்கிறார் என்பதை இக்கதைப் புலனாக்
கும். யமன் யார்? அவர் செய்வதென்ன என்பதை அறிந்
தால் இக்கதையின் உண்மை வெளியாகும். அந்த யமன் யார்.
யமன் மரண தேவதை. புசல், பூகம்பம், பெருந்தீ, பிரகிருதி
முதலியவைகள் யமபடர்கள். வறுமை, பஞ்சம், வெள்



ளம் முதலியவைகள் அவன் தூதர்கள். இத் தூதர்கள் தோன்
றிய மாந்தர்களுக்கு உதவிசெய்வது யமனுக்குப் பிரியத்தை
யளிப்பதாகும். சத்தியத்தில் சாய்ந்தவர்களே இக்கொடும்
உண்மைக்குத் தங்களையும் பலியளித்து பூஜை புரிவார்கள்.
மரணம் புவிக்கு அதிபதியாகும். **ओं यमाय पृथिव्याधिपतिः**
இவன் க்ஷத்திரியன். இவன் அச்சத்தாலேயே யாவும் நடை
பெறும். புவியிலுள்ளோர் இவனுக்கு இன்னும் காணிக்கை
செலுத்துகிறார்கள். ஏன்? இவன் போர் தேவனாவன். இப்
போர்த் தேவனின் அடியிற்கண்ட புதிய உண்மைகள் பழைய
யமனமுதம் போலவே புலனாகும்.

போர் என்பது அனுபவ அவசியமென்பது ஒருபுற
மிருக்க சாஸ்திரீயமான இராஜீய அடிப்படையாகும். ஒரு
இராஜ்யம் போர் என்னும் நிலையிலேயே நிற்கும். தற்காப்
பிற்காகவும் அகப்புற சத்துருவினின்று காப்பதே இதன்
முதற் பணியாகும். போர் அழிந்தால் இராஜ்யமில்லை;
போரை புவியிலிருந்து துரத்துவது பைத்தியக்காரத்தன
மாகும். அதனால் ஒழுக்கமும் அடியோடொழியும். ஒரு
வேளை போர் ஒழியுமேயானால் ஆன்மாவின் அற்புதமான
வன்மை யெல்லா மழிந்து புவியை சுய நல தேவாலய
மாகும். சாந்தமான காலத்தில் திடமான தேசத்துடன்
காலத்தை சுகமாய்க் கழிக்கப் போரே பெரும் உதவியை
யளிக்கும். சாந்தமதிகமானால் தன்னல மதிகரிக்கும். அப்
பொழுது போர் தெய்வப் பிரசாதம்போல் தோன்றும்.
எனக்கு என் வாழ்க்கைக்கே விபத்து வந்துவிட்டதென
எண்ணிப் பெரும் நோக்கம் ஒன்று திரண்டு தியாக உணர்வும்
புலனாகும். மிருத்யுவிலே யாவரும் அன்புடனாகி வரும் சந்
ததிகளுக்கெல்லாம் அவ்வன்மைப் பெருக்கும். குட்டிச்
சண்டைகளும் வகுப்பு வாதங்களும் பெரும் யத்னத்திற்கு

பலியாகும். கற்றவனும் கலைஞனும் சுமக்கும் இனி கஷ்ட மெனக் கருதி போரில்லையேல் சிருஷ்டியை வேரன்னியிலுள்ள மரம் என எண்ணுவான். யுத்தத்தில் செல்லுபவன் சூக்ஷ்ம மான எங்குமுள்ள ஒரு சக்தியை யுணர்வான். இந்த சக்தி யையே போரிலுள்ள இரு கட்சிகளும் கடவுள் எனக்கு ஜயம் அளிப்பார் எனக் கூறுவது. பலமன்னியிலுள்ளவன் போரை ஏதோ தீச் செயல் எனக்கருதுவான். விசுவரூபமான தேகங் களின் சங்கற்பத்தில் தன் பெரிய உணர்வால் தன்னலத்தைத் தியாகஞ் செய்கிறான். போர் என்பது புவி சனங்களின் சட்ட மாகும். போர் என்பது ஏதோ லாபத்திற்காகவே புரிவ தில்லை. அது ஆன்ம கண்ணியத்தைக் காப்பாற்றுவதற் காகும். ஆன்மகண்ணிய மன்னியில் பொதுநல உணர்வு இல்லை. போர் என்பது நீதியும் ஒழுக்கமுமாகும். நித்திய மான சாந்தம், அநீதியும் அறக்குறைவும் அசாத்தியமுமாகும். புவியில் பல இராஜ்யங்களிருப்பதே போரின் அவசியத்தைப் புலனாக்கும். போரினால் இராஜ்யம் ஸ்தாபனமாகி அதனால் அதிக சனங்கள் பெருகுவது கண்கூடு. (ஜர்மன் தத்துவ ஞானி, டிரிட்ஷ்கே) இரண்டு நோக்கங்கள் முட்டிக்கொள் வதே போராகும். அப்பொழுது பொருளையும், சுகத்தையும், சீவனையும் லட்சியம் செய்வதில்லை. வரும் சந்ததிகள் கஷ்டப் படுவார்கள் எனவும் கருதுவதில்லை. சனங்கள் அப்பொழுது உரிமையை எண்ணுவதில்லை. கடமையையே கருதுகிறார்கள். இந்த உணர்வுடன் போர்புரியும்பொழுது பணம், பொருளைப் பற்றிச் சிந்தனை செய்வது பயனற்றது. ஏனெனில் யாவரும் ஆத்மபலியில் அமிழ்ந்துள்ளார்கள். தத்துவதரிசியும் அச் சடரை எழுச்சியாக்க முயலுகிறான். இல்லையேல் தான் அழிவான் என்பதை அறிவான்.

போர்புரிபவனில் வன்மை அவன் சிரத்தைக் கேற்ற-



வாகும். ஆதியிலே மனப்பூர்வமாய் நமது தர்மம் அழிந்து விடுமென எண்ணியே கிறிஸ்தவர்களும் மகமதியர்களும் போர்புரிந்தார்கள். ஆனால் இப்பொழுது போர்புரிவது வேறு நோக்கங்களுடனாகும். ஆனால் போர் புரிவதென்பது நடந்தே தீரும்.

மனிதரிடமுள்ள பெருங் குணங்கள் எல்லாம் சாந்த காலத்தில் மறைந்திருக்கும். ஆனால் போர்க்காலத்திலேயே அவை புலனாகும். அர்த்தமன்னியிலுள்ள மொழிகளையும் வாசகங்களையும் போர் அழித்து கபட வஞ்சகர்களையும் குணம் நிறைந்த சத்தியவான்களையும் படாடோபம் செய்பவர் களையும் புனிதமானவர்களையும் பிரித்துப் புலனாக்கும். மகா சனங்களின் மனத்தையும் புனிதமாக்கும். (எப். எஸ். ஆலி வரின் போர் பரிட்சை என்னும் நூல், பக்கம் 84) புவியிலே நமக்குரிய நிலை வேண்டுமானால் போரின் உதவியைநாடி விபத் துக்களை எதிர்த்து திடம் தீரத்துடன் முன் செல்லவேண்டும். (வான். பர்ன் ஹார்டி)

இப்போர் தேவரான யமன் மொழி இரகசி யத்தைச் சொல்பவர்களும் கேட்பவர்களும் பெரிய உலகத் தைப் பற்றுவார்கள்.

இதைத் தீண்டாதவர்களும், பிராமணரல்லாதவர் களும், இளம் பிராமணர்களும், பெண்களும் பாமரர்களும் படித்தறிய வேண்டுமென சுலபமான தமிழில் வடமொழி மூலத்தின் உணர்வைத் தமிழில் செய்துள்ளோம். குற்றங் குறை களைந்து, குணம் கீர்த்தியைப் பருகவேண்டுமென விரும்புகிறோம். யம பகவானின் சந்தேசம் என ஒரு அரு மையான வியாசம் எழுதி யளித்த சென்னை சட்ட இலாகா ஜில்லா நீதிபதி ஸ்ரீமான். கே. எஸ். இராமசாமி சாஸ்திரிகள் அவர்களுக்கு எனது நன்றியைச் செலுத்துகிறேன்.

புதிய சயான கிருகம்<br>பம்பாய், 1-1-32.

எம். ஆர். ஜம்புநாதன்

சென்னை நீதி இலாக ஜில்லா நீதிபதி

ஸ்ரீ. கே எஸ். இராமசாமி சாஸ்திரியார்

எழுதிய

## யமபகவனின் புதிய சந்தேசம்.

---

ஸ்ரீ பகவான் சொல்வதாவது :—பிறந்தவர்கள் மரிப்பது நிச்சயம்; மரிப்பவர்கள் பிறப்பது நிச்சயம். தினந்தோறும் மரிப்பதைப் பார்க்கிறோம். அடிக்கடி பிறப்பதும் கண்கூடு. ஆனால் சன்மப் சாவை நம்மால் இணைத்துக் காண முடியவில்லை. ஞாபகார்த்தம் என்னும் செய்யுளில் கவிச்சக்கரவர்த்தி டெனிஸன் நினைத்தது போல் நாம் ஒவ்வொருவரும் எண்ணுகிறோம்.

மனிதன் அஞ்சும் நிழல் நமது அன்பைப் பிரித்தான். இருளும் குளிருமான போர்வையால் உருவமன்னியில் உன்னைச் சுற்றினான். உன்னை மெதுவாய் முணுமுணுக்கச் செய்து துரிதமாயும் நான் வரமுடியாத நிலயத்தில் அழைத்துச் சென்றான். ஐயோ! அந்தச் சாயை எங்கேயோ ஒரு பாழிடமொன்றில் காத்திருக்கிறான்.

சாயையைப் பற்றி எவன் சொல்லமுடியும்? அதைப் பார்ப்பவன் மௌனமாவான்.

ஒருவரும் திரும்பாத இதுவரைக் கண்டுபிடிக்காத அக்கண்டத்தில் இருப்பது என்ன என்பதை நாம் எப்படி அறிவோம்? எல்லா சமயாசாரங்களின் சாவியை அடைந்து நிழல் வடிவமான அவனிருக்கும் நிலயத்திலுள்ள பகவான் யமனின்



மொழிகளாலன்னியில் அறியமுடியாது. நேர்முகமாய் அவனை தரிசனஞ் செய்து பேசியவர்கள், சாவித்திரியும் நசிகேதசனுமான இருவர்களேயாகும். காதலின் வன்மையாலும், கபட குற்றமற்ற குணத்தாலும் அவனை முறையே தரிசித்தார்கள்.

கடோபநிஷதத்தில் யமன் சொல்வதாவது :—ஒவ்வொன்றிலும் இணைந்து அவைகளுக் கப்பாலுள்ள அவ்வான்ம ஒளியை என்னைக்காட்டிலும் அறிபவன் எவன்? மரணத்திற்குத் தலைமையான தலைவனை யமனன்னியில் வேறு யாது புலனாக்குவான்? மரணத்திற்கு மேன்மையான அமுதவாழ்க்கையின் நிலையை மிருத்யு வினாலேயே புலனாக்க முடியும்.

யமனின் சந்தேசம், எல்லாக் காலத்திலுள்ள சகல ஜனங்களுக்கும், சகல தேசத்தினர்க்கும் யுகம் யுகமாய்த் தோன்றும் எல்லா ஜீவராசிகளுக்கு மாகும். ஆனால் சந்தேசத்தின் சில அம்சங்கள் நவீன மக்களுக்குத் தனிமையான அத்தியாவசிய மாதலால், அது நவீன பாரத மக்களுக்கு மிகவும் பயனுள்ள தானதால் அவைகளைப்பற்றி மொழிய விரும்புகிறேன்.

மரணத்தில் அடிக்கடி வீழ்பவன் எவன்? யமபகவான் மொழிவதாவது :—புலன் வாழ்க்கையில் பெரிதும் பாயும் பாமரர்கள் பணத்தாசையினாலே பெருங் கலக்கமாகி புனித வாழ்க்கையின் வழியை அறிவதில்லை. பார்ப்பதையே அவன் பொரும் சத்தியமென எண்ணி பார்க்காததை பொய் என எண்ணுகிறான். அப்படி எண்ணுபவன் எனக்கு அடிக்கடி இரையாகிறான். அவர் மறுபடியும் மொழிவதாவது :—ஒற்றுமையைக் காணாமல் வேற்றுமையையே காண்பவன் யமன் வசமாகி அடிக்கடி மரணத்தை அடைகிறான். அவர்

மறுபடியும் கூறுவதாவது:—பொருள்களிலே புத்தியைச் செலுத்தும் பாமரபுத்தியுள்ளவன் யமனின் பெரிய வலையில் அகப்படுகிறான். இதனால் புலன், பொருளாசை, பிரிந்து வேற்றுமைபோல் புலனாவதின் ஆதாரவான ஒற்றுமையை யறிந்து அகண்டமான அற்புதத்தை அகத்தில் காண்பவனே மிருத்யுவை ஜயிக்கமுடியும் என்பதாகும்.

நவீன உலகத்தையும் பிரிக்க முடியாமல் அத்துடன் இணைந்திருக்கும் நவீன இந்தியாவையும் சுற்றிக் கொண்டிருக்கும் விபத்து எது? இன்பமாய் மின்னும் பொன்னொளி புலன்களில், ஆசையாகி நிலையாவது, புனித பெரிய சூரியனின் சோதியினின்று நீங்குவதாகும், சிறந்ததினின்று பிரிந்து செல்வாக்கும் சரசமான பிரியமான வழியைப் பற்றுவதாகும். மிருகவன்மையை ஆன்ம வன்மைக்கு அதிகமாய்ப் புகழ்ந்து, அகிம்சை பிரிந்து இம்சையுடன் இணைவதாகும். யமபகவான் சொல்வதாவது:—சிறந்த வழியொன்று: பிரியமான வழி வேறு. இருவழிகளும் வெவ்வேறான பயன்களை அளித்து ஜீவர்களை மாறான வழிகளில் செலுத்தும். சிறந்த வழியை நாடுபவன் செம்மையான சாசுவத பயனைஅடைவான். பிரியமான வழியை நாடுபவன் பெரும் நோக்கத்தினின்று இழப்பான். சிறப்பும் பிரியமும் மனிதனை நாடும். அறிஞன் அவைகளின் குணங்களை நன்றாய் புத்தியால் பகுத்தறிகிறான். பகுத்தறிவுள்ளவன், ஆன்ம சக்தியுள்ளவன் பிரியமான வழி பிரிந்து செம்மையான சிறப்பை நாடுகிறான். சிற்றறிவுள்ளவன் சிறிய லாபத்திற்காக பிரியமான வழியைப் போற்றுகிறான். ஆனால், நீ நசிகேதசனே! அற்பமான சிவர்களின் வழியை நினைத்துப் பொன்போல் மின்னும் பிரியமான வழியை நீவிட்டு விட்டாய். மனிதர்கள் மூழ்கி மறைந்த பொருளாசையோ உனக்கில்லை. இயல்பிலே இவ்விரண்டும் வேறு: அதன்



பயன்களும் அப்படியே. மின்னிப் பகட்டும் பிரியமான புலன்களால் நீ மயங்காமல் அறிவென்னும் அமுத வழியை நீ விரும்புகிறாய். புலன்களின் விருப்பமான சுழல் நீரில் மூழ்கியவர்கள் தங்களையே அறிஞர்கள் என எண்ணி, பற்பல கோணலான வழிகளில் சென்று வகைவகையான கொடுமைகளுக்குள்ளாகி குருடனைக்குருடன் பற்றுவது போல் பற்றித் தவிப்பார்கள். 1914ம் வருடம் கடும் போரினின்று எழுந்த நவீன உலகம் இச்சந்தேசத்தை ஒரு நாளும் மறக்கலாகாது, மறக்காது. சூரியனிலே ஒரு நிலம் வேண்டும், குடியேற நாடு வேண்டும், பூலோக வியாபாரம் வேண்டும், வெள்ளைக்காரனின் பொறுப்பு, முதலிய பிரியமான இன்ப சுவிசேஷங்கள் கூரையின் உச்சியிலிருந்து பறை சாற்றப்பட்டன. குருடனைக் குருடன் பற்றுவதுபோல் நாமெல்லாம் கண்மூடியாய்ச் சென்று பொருளாதாரச் சச்சரவு, இராஜீய குழப்பம் நிறைந்த பெரும் படு குழியிலே விழுந்துள்ளோம்.

## மூன்று மாயைகள்

நவீன காலத்தின் நாதனான பிரியத்தை நாடி, சிறப்பும் செம்மையினின்று பிரிந்த இப்பாதையே முதல்மாயையாகும். அறிஞன் என நினைக்கும், நானே நவீன உலகம் அதற்குள்ளான நவீன இந்தியா அறிவின் முயற்சியினாலேயே பரிபூர்ணமான சனாதன சத்தியத்தைக் காணலாம் என்பதே இரண்டாவது மாயையாகும். (Science) சாஸ்திரத்தைப் பரிபூர்ணமாக்கினால் சத்தியம் தானாகவே தன்னைத் தெளிவாக்கும். புல்லாகிப் புழுவாகும் என்றும் விகாசவாதம் என்னும் சிறகால் பறந்தால் அருள் நிலையைப் பெறலாம். சாஸ்திரம் தூலப் பொருள்களின் விகார சூட்சமங்களையெல்லாம் அறிவித்துவிட்டது. ஆதலால் ஜன்மம் சாவென்னும் சூட்ச

மத்தை அறிவித்து சாசுவதத்தை அளிக்கும், என சாஸ்திரம் கூறும். யமபகவான் இவ் விஞ்ஞானத்தை வெளியாக்குகிறார். இப் புத்தியினாலேயே இதைப் பெற முடியாது. அன்பனே! அனுபவியால் கற்பிக்கப்பட்டால் சத்தியம் அனுபவமாகும். கல்வியினாலும் கருத்துக் கூர்மையினாலும், பலகேள்விகளாலேயே அது குணமாகாது. அதனால் அனுகப் பட்டவனே அதை அடைவான். ரதத்தை அடக்கும் புத்தி மேன்மையானால், புலன்கள் கீழ்ப்படிந்து வசியமுள்ள குதிரைப்பாகன் போலாவான். புத்தியும் பயிற்சியும் பழக்கமு மில்லாத ஆன்மா மிருத்யுவிற்க ப்பாலுள்ள சனன மரணத்தினின்று நீங்கியுள்ள அவ் வமுதசிவனைப் பெறமுடியாது. ஆனால் பழக்கமும் பயிற்சியுமுள்ள ஆன்ம சன்மம் சாவினின்று நீங்கி அவ் வமுத வாழ்க்கையைப் பெறுகிறான். புத்தியுள்ள பாகனைப் போலுள்ளவன் அப்பெரும் அமுதத்தைப் பெறுகிறான்.

## அவனை அறியவும்

மனோவிஞ்ஞான சாஸ்திரங்களுக்கு தர்மவாழ்க்கை அவசியமில்லை என நவீன உலகமும் புதிய பாரதமும் கூறுவது மூன்றாவது மாயையாகும். ஆதியில் கலைஞானம் கடவுளுக் கெனக் கருதினார்கள். நவீனத்திலோ கலை கலைக்காகவே கருதப்படுகிறது. சத்தியத்திலே நமது இஷ்டம்போல் நுழைய நமக்கு உரிமையுண்டு. சத்தியம் மாறாமலிருக்கும் ஒரு பொருளில்லை. அது இஷ்டம்போல் நமக்கு வளைந்தாக வேண்டும் என்பதே அம்மூன்றாவது மாயையின் நோக்கம். விளக்கமாய் யமபகவான் கூறுவதாவது:—தீச் செயலினின்று தளராதவனும் மனோசாந்தமும் திடமும் பொறாதவனும் அமைதியற்றவனும் அவனைக் காணமுடியாது. ஞானத்தாலும் திருஷ்டியாலுமே அவன் காண்பான். ஒரு அற்புதமான உதாரணத்தால் அவர் விளக்குவதாவது:—ஆன்மாவை இரதத்தின் தலை



வனாக எண்ணவும் தேகம் இரதமாகும். பாகன் புலனுக்கும் புத்தியாகும். மனமே கடிவாளமாகும். புவியிலுள்ள பொருள்களில் மேயும் குதிரையே புலன்களாகும். புத்தி மனத்தை அடக்க வில்லையேல் புலன்கள் பயிற்சியற்ற முரட்டுக் குதிரையின் புத்திசூன்ய பாகன் போலாவன்.

இயேசுநாதர் சொல்வதுபோல் புனித இருதயமுள்ளவர்கள் அவனைப் பார்ப்பார்கள். தர்மசிந்தனையுள்ளவர்களே தரணியின் அழகைக் காணலாம். அவர்களே சத்தியத்தைக் காண்பார்கள். நீதி கருணை என்னும் தூண்களில் சிவதர்மம், தேசிய தர்மம், சர்வதேசிய தர்மம் நிற்கும்புவியிலும் பரத்திலும் அதன் வியில் ஆனந்தமில்லை. சுதந்தரத்தை நாடி நன்மையைப் பழிப்பவர்களும், நன்மை பிரிந்து சத்தியத்தை நாடுபவர்களும் அறிவுகுறைந்தவர்கள். சத்தியத்தையும் நன்மையையும் சேர்ப்பது நன்மையாகும். இவ்விரண்டு பிணைந்தவனுக்கு அவ்வானந்தம் சாக்கும்.

நவீன உலகத்தையும் புதிய பாரதத்தையும் எழுச்சியாக்கும் பல உண்மைகள் யமனின் சந்தேசத்திலுண்டு. அவைகளில் முதன்மையான ஒன்றையே இங்கு மொழிகிறேன். கலை வாழ்க்கை, தர்ம வாழ்க்கை என்றால் என்ன? ஆன்மா அனுபவத்திற்குக் காரணமான அகக் கண்கள் அவைகளால் காணும். நித்தியமான தலைவனின்று அநித்திய நிலத்திலே தனது நோக்கத்தைச் செலுத்தும் நவீன உலகம் மதியற்றதாகும். பூவுலகமெல்லாம் ஜயித்து ஆன்மாவை இழப்பதால் ஒருவனுக் காதாயமென்ன? ஆன்மாவிற்கு நிகரான பொருளுண்டோ? யமபகவான் கூறுவதாவது. அவனைப்பற்றி பலர் செவியுறுவதில்லை? அவனைச் செவியுற்றாலும் பலர் அறிவதில்லை, அவனை அறிவிப்பவன் அற்புத புருஷன். அவனை அணுகுபவனும் அற்புதனே. அற்புதமான சிருஷ்டியிலே

மறைந்தவன். ஆனால் இருண்ட இருதயத்திலே திடமான தியானத்தால் அறிபவன் அற்ப இன்பத்தையும் அற்ப கஷ்டங்களையும் தாண்டுகிறான். பொருள்களின் அகப்புருஷன் அவனே. அவனுக்கு சன்மமில்லை, சாவில்லை. அணுவிற்கு அணுவாகி அகண்டத்திற்கு அகண்டமாகி இருதயத்திலுள்ளான். புனிதமான பயிற்சியாலும் அகக்காட்சியாலும் தியானமென்னும் அகச் சுவர்கத்தில் அவனைக் காணலாம். தேகத்தில் தேகமன்னியிலுள்ள அவனைத் தியானிப்பவன் துக்கம் துன்பங்களைத் தாண்டுவான். அவனுக்குச் சிருட்டி எல்லாம் விரும்பும் உணவாகும். மிருத்யுவும் கசப்புடனுள்ள விரும்பும் ஊறுகாய் போலாகும். அவனே மிருத்யுவையும் அமுதத்தையும் சேர்க்கும் பாலம் போலானான். நிலையற்ற சம்சார சாகரத்தைத் தாண்ட விரும்புபவனின் ஆனந்தமான அக்கரையாகும். பொருள்களின் மேல் ஓட்டத்தில் மனம் புலன்களைவிட பெரியது. புத்தி மனத்தைவிட பெரியது. சகஞ்ஞானம் சிவஞ்ஞானத்தைவிடச் சிறந்தது. மாயையானது சகஞ்ஞானத்தை விடச் சிறந்தது. மாயைக் கப்பால் மேன்மையானவன் புருஷோத்தமன். அவனைவிட பெரியவனில்லை. இருதயத்தில் அவன் மறைந்துள்ளபடியால் அவன் காண்பதில்லை. அகக் காட்சியை கூர்மையாக்கினால் அவனைக்காணலாம். அறிந்தவர்களை நாடி எழுச்சியாகி அறிந்து கொள்ளவும். க்ஷௌரக் கத்தியைப் போல் அப்பாதை கூர்மையானதாகும். அப்பாதையினால் அவனை அடைவதால் சன்மம் சாவினின்று நீங்குவான். வெளி நாடும் புலன்களால் அவர் நம்மைச் சிருட்டித்துள்ளார். அதனாலேயே நாம் உலகத்திலே பார்க்கிறோம். வீரமுள்ளவனே புறம் நாடாமல் அகம் நோக்குகிறான். அமுத சிவனில் சூரியன் உதயமாகி அஸ்தமாகிறான். இருதயத்தின் இருள் நிலயத்திலே இறைவன் நிலையாய் புகையற்ற சுடரான சோதியாவன்.



அகமூச்சு, புறமூச்சினாலேயே நாம் சீவிக்கவில்லை. அவன் அருளாலேயே நாம் அசைவது. அனல் அநேக வடிவங்களாகி எரியுங்கால் மரம்வடிவம் எடுப்பதுபோல் ஈசன் இகத்திலாகி அதைக் கடந்தவன். ஒளி உதவியாலுள்ள கண்களுடைய நம்முடைய குறைகளால் கதிரவன் கலங்கமாகாதது போல் நமது துக்கம் துன்பங்களால் அவன் பாதிக்கப் படுவதில்லை. அவனைக் காண்பவர்களே ஆனந்தமும் அமைதியுமடைவார்கள். நித்தியமான அசுவத்த மரத்தின் வேர் உயரத்திலும் கிளை இலை கனிகள் புவியிலுமாகும். இந்த வேரே விமலனாகும். அந்த பயங்கர புருடனால், அனல் எரிந்து சூரியன் உதயமாகி இந்திரனும் வாயுவும் மிருத்யுவும் தங்கள் கடமைகளைச் செய்வது. எல்லா விருப்பங்களினின்று விலகினால் மனிதன் நித்தியமாகி அவ் வகண்ட அமுதானந்தத்தை இங்கு இப்பொழுது அனுபவிப்பான்.

இதுவே யமனின் சந்தேசம். நாம் தினந்தோறும் மும்முறை துதி செய்யும், அசத்தியத்தினின்று சத்தியத்திலும் இருளினின்றுசோதியிலும், மிருத்யுவினின்று அமுதத்திலும் என்னைச் சேர்ப்பிக்கவும், இம்மொழிகளால் அவனைத் துதி செய்வோம்.

---

பார்மீது நான் சாகாதிருப்பேன் காண்பீர்—
மலிவு கண்டீ ரிவ் வுண்மை பொய் கூறேன் யான்
மடிந்தாலும் பொய் கூறேன் மானுடர்க்கே
நலிவுமில்லை சாவுமில்லை கேளீர்.

—பாரதி.

# மரணபயம்

மகாத்மா காந்திஜீ.

சுயராஜ்ய மென்பது மரணபயத்தை அழிப்பதாகும் மரணபயத்தில் பாயும் நாடு சுயராஜ்யத்தைப் பெறமுடியாது ஒரு வேளை பெற்றபோதிலும் அதை பாதுகாக்க முடியாது,

இங்கிலீஷ்காரர்கள் தங்கள் சிவனை சட்டைப்பையில் எடுத்துச் செல்லுகிறார்கள். அராபியர்களும் பட்டாணியர்களும் மரணத்தை ஏதோ சாதாரண நோயிற் கதிகமாய் எண்ணுவதில்லை. பந்துக்கள் மரணத்திற்கு அவர்கள் ஒரு பொழுதும் அழுவதில்லை. போயர்ப் பெண்கள் இப்பயத்தின் அணுவையும் அறிவதில்லை. போயர் சண்டையில் ஆயிரக் கணக்கான போயர் வனிதைகள் விதவைகளானார்கள். அவர்கள் லட்சியஞ் செய்யவில்லை. புருடனோ மகனோ இறப்பதை அவர்கள் எண்ணவில்லை. தேசம் கண்ணியமானால் அதுவே பெரிய மகத்தான செயல் எனக் கருதினார்கள். தேசம் அடிமையானால் புருடனாலும் பயனென்ன? மகனை அடிமையாய் வளர்ப்பதைக் காட்டிலும் அவன் தேகத்தைக் கொளுத்தி அவன் புகழ் ஞாபகஞ் செய்வதே பெருமையாகும். இப்படியே போயர் பெண்கள் பெருங் கல் கிளைவுள்ளவர்களாகி தங்கள் அருமைப் புதல்வர்களை யமதூதனுக்கு ஆனந்தமாயளித்தார்கள்.

இச்சனங்கள் கொன்று கொலை புரிவார்கள். ஆனால் கொல்லாமல் சாகத் தயாரா யிருப்பவர்களின் பெருமையோ இன்ன மதிகமாகும். பூமண்டலம் அவர்களைப் போற்றும். அவர்களே புவியின் உப்பாகும்.

நாம் சுயராஜ்ய மடைந்தால் நாம் மரணபய மென்பதை விட்டவர்களா யிருப்போம். இல்லையேல் சுயராஜ்ய மடைந்திருக்க மாட்டோம். இதுவரை குழந்தைகளை பலியளித்துள்



ளார்கள். சர்கார் ஒரு வேளை சுட்டால் முதற் தரமாயுள்ள மனிதர்கள் மரணமாக சந்தர்ப்பமாகுமென நம்புகிறேன்.

குழந்தைகள், இளங் காளைகள், பெருங் கிழவர்கள் இறந்தால் நாம் ஏன் கலங்குகிறோம்? சன்மம் சாவில்லாத தருணமே சகத்திலில்லை. ஆன்மா சாவதில்லை என நாம் நம்புபவர்கள். செத்தாலும் சிவித்தாலும ஆன்மா அப்படியே இருக்கும். சிருட்டியும் சம்காரமும் சதாகாலமும் நடைபெறும். சுகதுக்க முடனாவதற்கு இங்கு ஒன்றும் இல்லை. தேசத்திலுள்ள சனனத்திற் கெல்லாம் சந்தோஷங் கொண்டாடினால் எத்தனை கொண்டாட்ட மாகும். அப்படியே மரணத்திற்கு துக்கமுடனானால் ஓயாத கண்ணீர் விடவேண்டுமே. இந்த ஒரு நெடும் நினைவு மரண பயத்தினின்று பிரிய உதவியளிக்கும்.

இந்தியர்கள் தார்மிக புருஷர்களாகும். நாமும் அதைச் சரி என்கிறோம். ஆனால் மரணத்தைக் கண்டு நம்மைப்போல் பரிதவிப்பவர்கள் புவியிலில்லை. இந்துக்களே இவ்விஷயத்தில் பெரும் மோசநிலையில் உள்ளார்கள். ஒரு குழந்தை சனனத்திற்கு பெருங் கொண்டாட்டம், ஒருவர் இறந்தால் குய்யோ முறையோ எனக் கூவி அருகிலுள்ளவர்களுக்கு இரவு தூக்கம் வருவதில்லை. சுயராஜ்யத்திலே நமக்கிஷ்டமுண்டானால் அது ஒருவேளை பெற்று அதைப் பாதுகாத்து பெருமையுடனாக வேண்டுமானால் பரிபூர்ணமாய் இப் பயத்தினின்று பிரியவேண்டும்.

மரண பயம் நீங்கியவனுக்கு சிறைச்சாலை தூக்க முண்டோ? சற்று சிந்தனை செய்தால் சுயராஜ்யம் தாமதமாவது மரணம் அதற்குக் குறைவான கஷ்டங்களைக் காண பின்வாங்குவதனாலாகும். மரணத்தை நல்வரவு கூறுபவன் மற்றவன் முத்திக்கும் உற்சாக மளிப்பான். அதனால் துக்கம் குறையும். துக்கத்தை பற்றுபவனுக்கு அதுவே சந்தோஷமாக மாறும். துக்கத்தினின்று ஓட முயற்சிப்பவன் பெருங் கஷ்டங்களுக் குள்ளாவன். மரிப்பதற்குள் அவன் பாதி இறந்து விடுவான். எதற்கும் சந்தோஷமாயுள்ளவன் எக்கஷ்டங்களையும் ஜயிப்பான். சந்தோஷமே காலனின் ஔஷதமாகும். வீரர்கள் புன்னகையுடன் மரிப்பார்கள்.

# காலன்

ஸ்ரீ அரவிந்தர்

காலனை பேசாமடந்தைக்கு இரண்டு மனமுண்டு. அது சக்தியையளித்து மறுக்கும். வழங்கித்தடுக்கும். எழுச்சியாக்கும். வீழ்த்தும். ஜயத்திற்கு முயற்சித்தாகவேண்டும்; தண்டனைக்கும் தயாராகவேண்டும். காலனின் மிருத்யுவை எதிர்க்கவேண்டும். சிவபிட்சையையும் காணவேண்டும். நாம் அஞ்சவேண்டாம். ஏனென்றால் பழைய பெயர் சொரூபத்தில் அடிக்கடி மரிப்பதினாலேயே புதிய புதிய வடிவம் பெயர்களால் அதிகவீரமுடனும் வன்மையுடனும் வாழ முடியும்.

முன்னணி செல்லவேண்டும்; இல்லையேல் காலனே மனோராஜ்யமான நமது அசைவின்மையை அடித்து முன்னணி செல்ல வற்புறுத்துவான். இப்படிச் செல்லுவது விபத்தும் பரிதவிக்கத் தகுந்ததாகும். நம்மைக் காக்கவேண்டுமென பழைய பிரேதங்களையும் துண்டு துக்கடாக்களையும் நோக்கி கண்ணீர்விட்டுக் கூவி, நாம் எத்தனை முயற்சிசெய்தும் படேர் படேர் என உடையும் பழையவைகளில் தொங்கிக் கொண்டு திக்கன்னியில் முன்னணி தூரத்தப்படுவதைக் காட்டிலும் பரிதாபமான துண்டோ? இயல்பிலே சலனமான பொருளுக்கு அசலனத்தை அழுத்தும் ஆபத்தை விட வேறு விபத்துண்டோ? இதனால் அதிகமாயும் கோரமாயும் அழுகும். இது சிவனைப்போல் தானே மாறும் சக்தி போலாகாமல் சவத்தைப்போல் அழுகிநாறும் பிடிவாதம் போலாகும்.

ஆகையால் பெரிய புருஷர்கள் யார்? அவர்கள் காலனுக்கு அஞ்சுவதில்லை. அதை எதிர்த்து எத்தண்டனையையும் விரும்பி அவதார புருஷர்கள் தீர்க்கதரிசிகள் நூதனங் காட்டுபவர்கள் புதியதாய்ப் புதுப்பிப்பவர்களின் சின்னமான பெரும் தலைவரின் நோக்கத்திலே புனித பெரும் திட நம்பிக்கையுடனின் பரம பிருமத்துடன் குஸ்திசெய்து முடியாததை சாதிக்கும் அஞ்சா நெஞ்சுள்ளவராகி பூவுலகத்திற்கு வழிகாட்டும் பலத்திலே, பாமனிலே, புனிதமாய்ப் பிடிமானமானவர்களாகும்.

# கடோபநிஷதம்

## முதல் வல்லி.

**उशन् ह वै वाजश्रवसः सर्ववेदसं ददौ ।**
**तस्य ह नचिकेता नाम पुत्र आस ॥ १ ॥**

வாசஸ்சிரவஸர் என்னும் முனிவர் விருப்பத்துடன் ஐசுவரியங்களை யெல்லாம் தட்சணையாக அளித்தார். அவருக்கு நசிகேதசன் என ஒரு மகன் இருந்தான். (1)

**तꣳह कुमारꣳ सन्तं दक्षिणासु ।**
**नीयमानासु श्रद्धाविवेश सोऽमन्यत ॥ २ ॥**

மகன் சிறியவனா யிருந்தபோதிலும் சிரத்தை அவன் சித்தத்தில் சென்றதும் தட்சணை யளிக்கப் படுங் கால் தனக்குள் நினைத்த தாவது :— (2)

**पीतोदका जग्धतृणा दुग्धदोहा निरिन्द्रियाः ।**
**अनन्दा नाम ते लोकास्तान्स गच्छति ता ददत् ॥ ३ ॥**

“நீர் அருந்திப், புல் தின்று பால் வற்றி, மலடான பசுக்களைத் தான மளிப்பவர் களுக்கு ஆனந்த மற்ற உலகமே யாகும். (3)

**स होवाच पितरं तत कस्मै मां दास्यसीति ।**
**द्वितीयं तृतीयं तꣳहोवाच मृत्यवे त्वा ददामीति ॥ ४ ॥**

பிறகு அவன் தந்தையை அணுகி :—‘ தந்தையே ! என்னை எவருக் களிப்பீர் என இருமுறை மறுமுறையும்’

வினவினன். 'இயமனுக்கு உன்னை அளிப்பேன்' என அவர் மறு மொழி யளித்தார். (4)

बहूनामेमि प्रथमो बहूनामेमि मध्यमः ।
किंस्विद्यमस्य कर्तव्यं यन्मयाद्य करिष्यति ॥ ५ ॥

பலர்களில் முதன்மையாகவும், சகாவாக வேறு பல ருடன் நான் சேர்ந் திருப்பேன். இயமன் என்னிடம் செய்து கொள்ளும் செயல் யாது? (5)

अनुपश्य यथा पूर्वे प्रतिपश्य यथा परे ।
सस्यमिव मर्त्यः पच्यते सस्यमिवाजायते पुनः ॥ ६ ॥

சென்றவர்களின் நிலைகளைச் சிந்திக்கவும், இனி நிகழ் பவர்களை நன்கு நினைக்கவும். தானியத்தைப் போலவே தேய்ந்து, மறு படியும் தானியத்தைப் போலவே மனிதர்கள் தோன்றுவார்கள். (6)

वैश्वानरः प्रविशत्यतिथिर्ब्राह्मणो गृहान् ।
तस्यैतां शान्तिं कुर्वन्ति हर वैवस्वतोदकम् ॥ ७ ॥

பிராமணன் அதிதி யாகச் சென்றால் அனல் வீட்டில் நுழைவது போலாகும். அது அர்க்கியத்தால் அமைதி யாகும். வைவஸ் வதனே ஜலத்தைக் கொண்டு வரவும். (7)

आशाप्रतीक्षे सङ्गतं सूनृतां चेष्टापूर्ते पुत्रपशूंश्च सर्वान् ।
एतद्वृङ्क्ते पुरुषस्याल्पमेधसो यस्यानश्नन्वसति ब्राह्मणो गृहे ॥८॥

எந்த அற்ப அறிஞன் வீட்டில் அதிதி பிராமணன் புசிக்க வில்லையோ, அங்கு, அறம், ஆசை, இனிமை, ஒற்றுமை, நம்பிக்கை, நற்செயல், பசு, மக்கட் செல்வமெல்லாம் அகன்று விடும். (8)



तिस्रो रात्रीर्यदवात्सीर्गृहे मेऽनश्नन्ब्रह्मन्नतिथिर्नमस्यः ।
नमस्तेऽस्तु ब्रह्मन्स्वस्ति मेऽस्तु तस्मात्प्रति त्रीन्वरान्वृणीष्व ॥ ९ ॥

மூன்று தினத்திற் கப்பால் இயமன், பிராமணனுக் கேற்றமரியாதையைப் பெறும லிருந்த நசிகேதசனைக் கண்டு கூறியதாவது:—பூஜைக் குரிய அதிதியான பிராமணனே! புசியாமல் மூன்று இரவு என் இல்லத்தில் இருந்தீர்! உமக்கு நமஸ்காரம் பிராமணனே! நான் நன்மையையடைய மூன்று வரங்களைப் பெற்றுக் கொள்ளவும். (9)

शान्तसंकल्पः सुमना यथा स्याद्वीतमन्युर्गौतमो माभि मृत्यो ।
त्वत्प्रसृष्टं माभिवदेत्प्रतीत एतत्त्रयाणां प्रथमं वरं वृणे ॥ १० ॥

நசிகேதசன் :—இயமனே! கௌதமர் என்னிடம் சாந்தமாகி, களிப்புள்ள சித்தமுடன் கோபங்களைந்து, நான் உன்னை விட்டுத் திரும்புங் கால் அவர் என்னை இன்பமுடன் வர வேற்க வேண்டும். மூன்று வரத்தில் நான் முதன்மை யாக விரும்புவது இதுவே. (10)

यथा पुरस्ताद्भविता प्रतीत औद्दालकिरारुणिर्मत्प्रसृष्टः ।
सुखंरात्रीः शयिता वीतमन्युस्त्वां ददृशिवान्मृत्युमुखात्प्रमुक्तम्

இயமன் :—என் கட்டளையிலிருந்து, ஔத்தாலக ஆருணி யான உன் தந்தை முன் போல் இன்பமுடனிருவார். இயமனிடமிருந்து பிரிந்த உன்னைப் பார்த்தவுடன் கோபம் நீங்கி இரவில் உற்சாகமாய் உறங்குவார்." (11)

स्वर्गे लोके न भयं किंचनास्ति न तत्र त्वं न जरया बिभेति ।
उभे तीर्त्वाशनायापिपासे शोकातिगो मोदते स्वर्गलोके ॥ १२ ॥

நசிகேதசன் :—"சுவர்க்கத்தில் பயம் அணுவளவுமில்லை. நீ (மலரும்) அங்கே மூப்பின் பயமுமில்லை. இரண்டும் கடந்து பசி, தாகம், துக்கம் தளர்ந்து யாரும் சுவர்க்க லோகத்தில் சந்தோஷ மாவார். (12)

स त्वमग्निँ स्वर्ग्यमध्येषि मृत्यो प्रब्रूहि तँ श्रद्दधानाय मह्यम् ।
स्वर्गलोका अमृतत्वं भजन्त एतद्द्वितीयेन वृणे वरेण ॥ १३ ॥

இயமனே! அச்சுவர்க்கத்திற்குச் சேர்ப்பிக்கும் செழுந் தீயை நீர் சிரத்தையுடனுள்ள எனக்கு அறிவிக்கவும். அச்சுவர்க்கத்தி லுள்ளவர்களுக்கே அமுதம். அதுவே நான் இரண்டாவதாக விரும்பும் வரமாகும். (13)

प्र ते ब्रवीमि तदु मे निबोध स्वर्ग्यमग्निं नचिकेतः प्रजानन् ।
अनन्तलोकाप्तिमथो प्रतिष्ठां विद्धि त्वमेतन्निहितं गुहायाम् ॥ १४ ॥

இயமன் :—நான் உனக்கு உரைப்பேன்; என்னிடம் கற்கவும். சுவர்க்கத்திற்குச் செலுத்தும் அவ்வக்கினியை நீ அறிவாயானால், நசிகேதசனே! அதுவே அனந்தமான யாவற்றின் பயனையும் அடைவதாகும். ஆனால் அதன் நிலையான ஆதாரவோ நெஞ்சில் நிலைத்துள்ளது. (14)

लोकादिमग्निं तमुवाच तस्मै या इष्टका यावतीर्वा यथा वा ।
स चापि तत्प्रत्यवदद्यथोक्तमथास्य मृत्युः पुनरेवाह तुष्टः ॥ १५ ॥

அகிலத்தின் அடிப்படையான அதன் ஆதாரவு உபகரணங்கள் முதலியவற்றைப் பற்றி யெல்லாம் அவர் விளக்கஞ் செய்தார். நசிகேதசன் மறுமொழியைக் கண்டு, அவன் அறிவிற்கு மெச்சி இயமன் மறுபடியும் மொழிந்ததாவது:—(15)

तमब्रवीत्प्रीयमाणो महात्मा वरं तवेहाद्य ददामि भूयः ।
तवैव नाम्ना भवितायमग्निः सृंकां च मामनेकरूपां गृहाण ॥ १६ ॥

மகிழ்ச்சி பெற்ற மகான் கூறியதாவது—“இங்கு, இன்று; இன்னும் ஒரு வரத்தையுமளிக்கிறேன். இவ்வக்கினிச்சுடரும் உன்பெயரால் அழைக்கப்படும். இவ்வழகிய பலவடிவமான மாலையையும் பெற்றுக் கொள்.” (16)



त्रिणाचिकेतस्त्रिभिरेत्य सन्धिं त्रिकर्मकृत्तरति जन्ममृत्यू ।
ब्रह्मजज्ञं देवमीड्यं विदित्वा निचाय्येमाँ शान्तिमत्यन्तमेति ॥१७॥

“நசிகேதசனின் முத்தீயை, (அறிவு, பயிற்சி, ஒழுக்கம்) எழுப்பி மூன்றுடன் (தாய், தந்தை, ஆசான்) இணைந்து முச் செயலை (திடம் பெறுதல், தியாகஞ் செய்தல், தானமளித்தல்) செய்வதால் சன்மம் சாவினின்று ஒருவன் பிரிவான். போற்றுவதற்குரிய பிரும்மத்தை அறியும் ஞானியை அறிந்து அவனை அனுசரிப்பவனும் இவ் வமைதியை அடைவான்.” (17)

त्रिणाचिकेतस्त्रयमेतद्विदित्वा य एवं विद्वाँश्चिनुते नाचिकेतम् ।
स मृत्युपाशान्पुरतः प्रणोद्य शोकातिगो मोदते स्वर्गलोके ॥ १८ ॥

நசிகேதசனின் முத் தீயை மூட்டி மூன்றையும் இஞ் ஞானம் கண்டறிந்தவன் அழிவென்னும் அணைகளினின்று முதன்மையாய் அகன்று துன்பம் தளர்ந்து சுவர்க்க நிலையில் இன்பமாவான். (18)

एष तेऽग्निर्नचिकेतः स्वर्ग्यो यमवृणीथा द्वितीयेन वरेण ।
एतमग्निं तवैव प्रवक्ष्यन्ति जनासस्तृतीयं वरं नचिकेतो वृणीष्व ॥

நசிகேதசனே! நீ விரும்பப்பட்ட தூரிய தீச் சுடர் இதுவேயாகும். உன்னுடைய திருநாமத் தாலேயே சனங்கள் இத் தீச் சுடரை தெளிவாக்குவார்கள். இனி மூன்றாவது வரத்தை விரும்பவும். (19)

येयं प्रेते विचिकित्सा मनुष्येऽस्तीत्येके नायमस्तीति चैके ।
एतद्विद्यामनुशिष्टस्त्वयाहं वराणामेष वरस्तृतीयः ॥ २० ॥

நசிகேதசன் :—“இறந்தவர்களைப் பற்றி அவன் இருக்கிறான் எனவும் இல்லை யெனவும் ஜனங்கள் சொல்வதை நான்

உங்களிடம் கற்று அறிய விரும்புகிறேன். நான் மூன்றாவதாக விரும்பும் வரம் இதுவே." (20)

**देवैरत्रापि विचिकित्सितं पुरा न हि सुविज्ञेयमणुरेष धर्मः ।**
**अन्यं वरं नचिकेतो वृणीष्व मा मोपरोत्सीरति मा सृजैनम् ॥२१॥**

இயமன் :—தேவர்களும் இப் புராதனத்தைப் பற்றி சந்தேக முற்றார்கள். அதைச் சுலபமாய் அறிவது அரிது. நசிகேதசனே! நீ வேறு வரத்தை விரும்பவும். என்னை வற்புறுத்தாதே. இதை விட்டு விடு. (21)

**देवैरत्रापि विचिकित्सितं किल त्वं च मृत्यो यन्न सुविज्ञेयमात्थ ।**
**वक्ता चास्य त्वादृगन्यो न लभ्यो नान्यो वरस्तुल्य एतस्य कश्चित् ॥**

நசிகேதசன் :—இயமனே! தேவர்களும் சந்தேக முற்றார்கள். இதை எளிதில் அறிவது அரிதெனச் சொல்லுகிறீர்கள். ஆனால், உம்மைப் போல் அறிவிப்பவர்கள் அரிது. அதற்குச் சமானமாய் நான் வேறு எதையும் விரும்ப வில்லை.

**शतायुषः पुत्रपौत्रान्वृणीष्व बहून्पशून्हस्तिहिरण्यमश्वान् ।**
**भूमेर्महदायतनं वृणीष्व स्वयं च जीव शरदो यावदिच्छसि ॥२३॥**

இயமன் :—"நூறு வயதான புத்திரர் பௌத்திரர்கள், பசுக் கூட்டம், யானை, பொன், குதிரை முதலியவைகளைக் கேட்கவும். பெரும் பூமி, நீ விரும்பும் காலம் வரை வாழ்வதற்கான வரத்தைக் கேட்கவும். (23)

**एतत्तुल्यं यदि मन्यसे वरं वृणीष्व वित्तं चिरजीविकां च ।**
**महाभूमौ नचिकेतस्त्वमेधि कामानां त्वा कामभाजं करोमि ॥ २४ ॥**

நசிகேதசனே! இதற்குச் சமானமாய் நீ நினைக்கும் ஐசுவரியம், நீண்ட வாழ்க்கையை விரும்பவும். பூவுலகிலேயே



பெருமையை விரும்பவும். நீ கேட்பது போல் உன் இச்சைகளை யெல்லாம் அனுபவிக்கும் வண்ணம் செய்வேன். (24)

**ये ये कामा दुर्लभा मर्त्यलोके सर्वान्कामाँश्छन्दतः प्रार्थयस्व ।**
**इमा रामाः सरथाः सतूर्या नहीदृशा लम्भनीया मनुष्यैः ।**
**आभिर्मत्प्रत्ताभिः परिचारयस्व नचिकेतो मरणं मानुप्राक्षीः ॥२५॥**

புவியிலேயே பெறுவதற் கரிதான எல்லா மனோ பீஷ்டங்களையும் நீ விரும்பலாம். இகத்திலுள்ளோருக்கு அபூர்வமான இரதம், சங்கீதம் அமைந்த ஸ்திரீகளையும், என்னிடமடைந்து அனுபவிக்கவும். ஆனால் மரணத்தைப் பற்றி என்னிடம் வினவாதே." (25)

**श्वो भावा मर्त्यस्य यदन्तकैतत्सर्वेन्द्रियाणां जरयन्ति तेजः ।**
**अपि सर्वं जीवितमल्पमेव तवैव वाहास्तव नृत्यगीते ॥ २६ ॥**

நசிகேதசன் :—இயமனே! மானிடப் பொருள்கள் அநித்தியமானவைகள். இகத்தின் இன்பம், வன்மை, யாவும் அழியும். ஆயுள் நாட்களெல்லாம் அற்பமே. நடனம், சங்கீதம், வாகனம் எல்லாம் நீரே வைத்துக் கொள்ளவும். (26)

**न वित्तेन तर्पणीयो मनुष्यो लप्स्यामहे वित्तमद्राक्ष्म चेत्त्वा ।**
**जीविष्यामो यावदीशिष्यसि त्वं वरस्तु मे वरणीयः स एव ॥ २७॥**

ஐசுவரியத்தால் மனிதன் இன்பமாவ தில்லை. உம்மைப் பார்த்த பிறகு நான் ஐசுவரியத்தையா அடைவது? உமது நியமம் போல் எனது வாழ் நாட்களாகும். முதன்மையாக விரும்பியதே நான் கேட்கும் வர மாகும். (27)

**अजीर्यताममृतानामुपेत्य जीर्यन्मर्त्यः क्वधःस्थः प्रजानन् ।**
**अभिध्यायन्वर्णरतिप्रमोदानतिदीर्घे जीविते को रमेत ॥ २८ ॥**

நித்தியமான அமுதத்தை அணுகிய மாந்தர்கள் வேறு

